# THE
# Parrot Messenger

BY

T. SARAVANA MUTTU, B. A.
Presidency College, Madras.

Madras
SREENILAYUM PRESS
1892

# தத்தைவிடுதூது

திருக்கோணமலை

த. சரவணமுத்துப்பிள்ளை

இயற்றியது.

சென்னை

ஸ்ரீநிலையம் அச்சுக்கூடம்.

1892

# தத்தைவிடு தூது

தேனோங்கு பூம்பொதும்பர்ச் செறிந்துபசுந் தழைபரப்பி
வானோங்கு தேமாவில் வாழுமிளம் பைங்கிளியே
மானேங்கு மைவிழியென் வஞ்சியிடைப் பைந்தொடிபால்
நானீங்கு புலம்புமொழி நற்கிளியே கூறாயே
நங்கையவள் பாற்சென்று நலம்பெறநீ கூறாயே.

இந்துநுதற் சந்தவளைச் சுந்தரியென் னின்னுயிர்பாற்
சந்துநடந் திளங்கிளியே தமியேன்சொற் கூறுதியால்
முந்திருவ ருஞ்சிறியேம் முன்றிலிலா டுங்காலந்
தந்தைமொழிக் கிட்டதனைத் தவறுவதேன் வினவுதியால்
தானுமெனை மறந்தனளோ தத்தாய் வினவுதியால்.

மல்லிகைசண் பகந்தேங்கு மந்தாரை வெட்சியுடன்
புல்லினமும் பலவளரும் பூம்பொழிலி லக்காலம்
மெல்லமெல்லப் பந்துகொடு விளையாடுங் காலவடாய்
சொல்லியது மறந்தனளோ சுகமே வினவுதியால்
தோகையெனைத் துறந்தனளோ சுகமே வினவுதியால்.

தீம்பலவி னீழலின்கட் டெரிவையவட் கியானறியேன்
ஆம்பன்மலர் மாலை யணிந்தேன் மகிழ்ந்தனளால்
சாம்பொழுதும் யான்மறவேன் தையலவ ளிக்காலம்
வீம்பான் மறந்தனளோ வினவாய் பசுங்கிளியே
வீணே புலம்புவதேன் விதியோ பசுங்கிளியே.

பன்னிருயாண் டவளொடியான் பயின்றிருந்து மிக்காலங்
கன்னிமுக நோக்கவிடார் கதவடைத்தார் கருணையிலார்
என்னிருகண் மணியனையா ளெனக்குரிய ளென்றிருந்தேன்
என்னே யெனதெண்ண மின்றுபட்ட வாறந்தோ
ஏதிலனா யிங்கே யிரங்குவல்யான் பைங்கிளியே.

செல்வமிலை யென்றுரைப்பர் சிந்தியார் மற்றொன்றுங்
கல்வியெனுஞ் செல்வங் கருதார் கருதாரால்
செல்வமோ வின்றிருக்குஞ் சென்றிடுமோல் நாளைமற்றக்
கல்வியொரு காலுமண்மேற் கற்றோர்ப் பிரிவிலதால்
கல்வி சிறந்ததன்றோ கழறாய் பசுங்கிளியே.

கல்வி மிகவிருந்தென் கணக்கிலசெல் வம்மிருந்தென்
மெல்லியற்கு நாயகன்மேல் விருப்பிலதேற் பைங்கிளியே
சொல்லரிய காதற் றுகடபவுள் ளொன்றினன்றோ
நல்லார் மணம்புரிவர் நலம்பெறுவா ருண்மகிழ்வார்
நாரியர்பா லிம்மாற்றம் நவிலா யிருஞ்சுகமே.

தந்தைமொழி தலைவகித்துந் தாய்சொன்மொழி யுளம்பொதிந்தும்
நந்தமக்குத் திங்கிழைத்த லலமோ பசுங்கிளியே
மைந்தர்துயர் நோக்கார் மனமெழுந்த வாறுரைக்கில்
அந்தோ மறுத்த லரியமாம் பைங்கிளியே
ஆருங் குறைசொல்லா றறிவாய் பசுங்கிளியே.

செங்கமல வாள்விழியாட் சேர்க்கக் கருதுமவன்
மங்கைதனக் கேற்ற மணவாள ளேறுபுகலாய்
நங்கைநிலைக் கேற்க நடக்கவல ளேறுபுவியிற்
கொங்குமலர் மாலை குரங்கிற் களிப்பாரோ
கோதையிட மிம்மாற்றங் கூறுதியாற் பைங்கிளியே.

மூடருக்கும் பேடருக்கும் முதியோர் மெலியோர்க்குந்
தேடருநல் லிரத்தினம்போற் றெரிவையர்கள் சேருவரோ
பீடுடைய கல்விநலம் பெற்றிருக்கும் வாலிபர்யாம்
வேண்டுவதை வேட்பமோ வினவாய் பசுங்கிளியே
விரும்புவமோ சந்நியாசம் வினவாய் பசுங்கிளியே.

பெண்ணருமை தானறியாப் பேதையர்க்குப் பெண்கொடுத்தார்
மண்ணிலுள காலம் வருந்துதற்கே பெற்றெடுத்தார்
கண்ணிலரித் தந்தைதமர் கடூரகிற் கேயுரியர்
எண்ணி யிளைந்தேங்கி யிருந்து பெறும்பயனென்
என்றுயிரா மாய்ந்த விவையவதாம் பைங்கிளியே.

தம்பெருமை தாமறியாத் தஞ்சமிலாப் பெண்கடமை
வெம்புலிவாய் மானென்ன வீணே கொடுத்திடுவார்
செம்பொற் றிரளுடனே வெந்துயரஞ் சேர்வதிலுஞ்
செம்பொனிலா வின்பஞ் சிறந்ததெனக் கூறுதியால்
தெரிவையவட் கிம்மாற்றஞ் சீர்க்கிளியே கூறுதியால். 12

உண்பதுவு முறங்குவது மூர்க்கதைகள் பேசுவதும்
பெண்கடொழி லென்றே பேதுறுவா ரொருசாரார்
பெண்களுக்குத் தம்பதியே பெருந்தெய்வ மென்பர்சிலர்
பெண்களுக்கு மடிமைகட்கும் பேதமில்லை யென்பர்சிலர்
பெண்மணிபா லிவர்நிலைமை பேசாய் பசுங்கிளியே. 13

மாதரார் தாமிலரேல் மனையும் வனமாநல்ல
மாதரார் தாமுளரேல் வனமும் வளமனையாம்
மாதரா ரன்றேல் வாழ்விற் சருங்கலமிம்
மாதரா ரன்றே வருந்தவரிம் மாநிலத்தில்
மாதுசிரேயின் மணிக்கிதைநீ யுருப்பாய் பசுங்கிளியே. 14

கல்விநலம் பெற்றனரேற் காரிகையார் காதலர்க்குச்
சொல்லருநற் றுணையன்றே தொல்லுலகு சிறக்குமன்றே
மெல்லியர்பாற் கல்வி விரும்பாத வீணரெலாம்
எல்லையிலா வின்பமதற் கிடையூறென் றேயியம்பாய்
என்னிருகண் மணியனையாட் கியம்பாய் பசுங்கிளியே. 15

கூட்டிற் பசுங்கிளிபோற் கோதையரை யெப்பொழுதும்
வீட்டி லடைத்துவைக்கும் வித்தகர்க்கு யாதுரைப்பேம்
பூட்டித் திறந்தெடுக்கும் பொருளாக் கருதினரோ
கேட்டோர் நகைப்பதுவுங் கேட்டிலரோ பைங்கிளியே
கிஞ்சுகவாய்ப் பைந்தொடிபாற் கிளத்தாய் பசுங்கிளியே. 16

அத்திமுதற் சிற்றெறும்பீ றுளவுயிர் யாவதிலும்
உத்தமராம் மாந்த ரொருவரே பேசவலார்
சித்தமகிழ்ந் தேபிறர்பாற் றெரிவையரைப் பேசவிடார்
எத்தான் மறுத்தனரோ வினவா யிளங்கிளியே
ஏதுகுற்றஞ் செய்தனரொன் றேவினவாய் பைங்கிளியே. 17

அந்தோ விசைப்பதெனை யரிவையர்க்குந் தீங்குபல
சிந்தைமகிழ்ந் தேபுரிவார் சிந்தியா ரொருசிறிதும்
பைந்தொடியார் தம்பாற் பரிதாபஞ் சற்றுமிலார்
இந்நிலை தமக்குளதே லிருப்பரோ வாடவர்தாம்
ஈதுகொடிது கொடிதென் றிசையாய் பசுங்கிளியே. 1

கண்ணைமறைத் தேகொடுபோய்க் காட்டில்விடும் பூனையைப்போ
பெண்ணைமனை யடைத்துவைத்துப் பின்னொருவர் கைக்கொடுப்ப
கண்ணால்முன் கண்டுமிலர் காதலர்சொற் கேட்டுமிலர்
எண்ணாது மெண்ணி யிருந்தார் பசுங்கிளியே
இக்கொடுமைக் கியாதுசெய்வா ரிசையாய் பசுங்கிளியே. 1

ஓரிரவன் றோர்பகலன் றுயிருள்ள நாளளவுங்
காரிகையா ருடன்வாழ்வார் கணவரோ யாமாயின்
ஓரிறையு மவ்விருவ ருள்ளமதை வினவாதே
பாரிலே மணம்புரிவோர் பாதகர்காண் பைங்கிளியே
பாவைதனக் கிம்மாற்றம் பகராய் பசுங்கிளியே. 2

தந்தைதா யார்மகட்குத் தலைவற் றெரிவரேனும்
இந்தமொழிக் கியாதுரைப்பா யென்னிலிவள் தாம்விரும்பும்
அந்தமகன் றன்னைமக ளந்தோ விரும்பிலளேல்
தந்தைதா யார்க்கென்றுந் தவிப்ப தவளன்றோ
சார்ந்துநீ தோகையிடஞ் சாற்றுதியாற் பைங்கிளியே. 2

தந்தையொரு வன்மகற்குத் தான்விரும்பு மோர்மகளை
மைந்த மணவெனலும் மைந்தன் வணங்கியெழுந்
தெந்தாயான் வேண்டே னிவளை விரும்புதியேல்
தந்தாய் மணத்தியெனச் சாற்றினனென் றேயுரைப்பர்
தையலிட மிக்கதைநீ சாற்றுதியாற் பைங்கிளியே. 2

தன்மனைக்கோர் பசுவேண்டிற் றும்பலகாற் பார்த்திருந்தும்
பின்னுந் துணிவிலராய்ப் பேதுறுதன் மாந்தர்குணம்
என்னே மணவினையே யிமைப்பொழுதி லேமுடிப்பார்
சின்னப் பதுமைகொடு சிறார்செய்மணம் போலுமரோ
தெரிவையவட் கிம்மாற்றஞ் சீர்க்கிளியே கூறுதியால் 2

ஆணுப் பிறத்த லவசியம்வே ருேர்குணமும்
பேணுர்தம் மின்னுயிராம் பெண்ணைக் கொடுத்திடுவார்
நாணுர் மதியார் நகைத்தே களித்திடுவார்
மாணுள் பசுங்கிளியே மலடாக் கழித்திலரோ
வாள்விழியென் னங்கையிடம் மாங்கிளியே கூறுதியால். 24

வண்ணவிளம் பைங்கிளியே வையகத்து மணமினிதேற்
பெண்ணொருபால் விம்மியழப் பிள்ளையொரு பாலலறத்
தண்ணறும்பூஞ் சோலைவிட்டுத் தாங்கரிய வெஞ்சுரமே
நண்ணியவெங் கரியதுபோல் நாயகன்றன் புறவதெனை
நாரியர்பா லிம்மாற்றம் நவிலாய் பசுங்கிளியே. 25

மண்ணுலகில் யாம்பிறந்து வாழ்வதினு லாம்பயனென்
எண்ணரும்வெந் துயர்போக்கி யின்பஞ் சுகியேமேல்
பெண்ணு ணிருவருமே பேரன் பொடுவாழின்
நண்ணுது வெந்துயரம் நற்கிளியே கூறுதியால்
நணுகுமா வின்பமெலாம் நற்கிளியே கூறுதியால். 26

அன்னநடை மைவிழியா ளும்பொன்மலர்க் கொம்பனையாள்
என்னிதய தாமரைக்கே திலக்குமியாம் பெண்ணரசி
தன்னன்மொழி கேளாது கஞ்சமுக நோக்காது
இந்நிலத்து வாழ்வதெவ னிறந்திடுவன் பைங்கிளியே
இப்பழிதான் சேருமென்றே யிசையாய் பசுங்கிளியே. 27

என்னிதயந் தனதாக்கி யென்னுயிருந் தனதாக்கி
என்னையிவண் வருத்துதரு ளிவட்கழகோ பைங்கிளியே
மன்னிதுவோ பெண்கள்குணம் மாற் றரினியரன்றே
என்னே யிரங்கா ளிரங்காள் பசுங்கிளியே
ஈதுகொடி தீதுகொடி திசையாய் பசுங்கிளியே. 28

அந்தோ தவறுதவ றறியா துரைத்தனன்யான்
பைந்தார்ப் பசுங்குழலாள் பாவமறி யாள்கிளியே
தந்தைதா யாரிலரோ றரியாளென் பாங்கருடன்
வந்தாள் மகிழ்ந்தாள் வதிந்தாள் பசுங்கிளியே
வானுலகி னின்பமெலாம் வந்தனவாற் பைங்கிளியே. 29

பெண்மணியை யான்பெறுநாட் பெற்றனனுற மகவையெல்லாம்
மண்ணவற்றுட் பிறிதோர்பொருண் மதியேன் மதியேனால்
ஒண்ணுதறன் னுடனேயா னோருயிரீ ருடலாகி
மண்ணுலகின் மகிழ்ச்சியுடன் வாழ்வேன் பசுங்கிளியே
மங்கையவள் மனதறிந்து வருவாய் பசுங்கிளியே. 30

கன்னன்மொழிக் காரிகையாள் கமலவிழி யான்மறவேன்
கன்னத் தெழின்மறவேன் கனியா யிதழ்மறவேன்
பின்னற் சடைமறவேன் பிடரி னெழில்மறவேன்
பன்னற் கருநகையும் மறவேன் பசுங்கிளியே
பாவையுரு வென்மனத்தே பதிந்துளதாற் பைங்கிளியே. 31

அன்னமெனு மென்னடையு மஞ்சிறைய மயிலொயிலுஞ்
சின்னக் கொடியிடையுஞ் செவ்வாய்க் கிளிமொழியுஞ்
சன்னச் சிலம்பொலியுந் தளவ நறுமணமும்
நன்னர்ப் பசுங்கிளியே நானோ மறவேனால்
நங்கைவடி வங்கிளியே நானோ மறவேனால். 32

கொங்கலர்பூஞ் சோலைவளர் மாங்கிளியே கோதையிடம்
நங்காய்நிற் காதலித்தே நலிவான் மெலிவானால்
தங்கா துயிரொன்றான் தானின் சரணென்றான்
நங்கா யிரங்கெனவே நவில்வாய் பசுங்கிளியே
நங்கையிட மென்னிலைமை நவில்வாய் பசுங்கிளியே. 33

முற்றிற்று.